# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் உஎ | திருவள்ளுவர் யாண்டு ககஅஉ<br>கர—ஐப்பசி<br>1951—அக்டோபர் | மலர் எ |


## கலைமகள் விழா, முத்தமிழ் விழா.

---

திருவருள் வளத்தால் நிகழும் திருவள்ளுவர் யாண்டு, புரட்டாசித் திங்கள், உ௰ங-ஆம் நாள் (9—10—51) செவ்வாய்க் கிழமை முதல் கலைமகள் விழாவும், முத்தமிழ் விழாவும் பேரார்வத்துடனும் பெருஞ் சிறப்புடனும் நிகழ்ந்து வருகின்றன. அக்டோபர் 9உ செவ்வாய்க்கிழமை மாலை கலைமகள் வணக்கமும் தமிழ்த்தாய் வணக்கமும் தண்டமிழ்த் தொண்டர்களால் உளங் கனிந்த அன்புடன் நடைபெற்றது.

அக்டோபர், 14, ஞாயிற்றுக்கிழமை தொடங்கி முத்தமிழ் விழா நடைபெறுகின்றது. ஒவ்வொரு நாளும் தமிழ் மக்கள் திரளாகக் கூடுகின்றனர்; முத்தமிழ் வளர்ச்சியில் ஆர்வங் காட்டுகின்றனர். அன்பர்கள் பலரும் தத்தம் ஆற்றலுக் கேற்பப் பணி புரிகின்றனர்; உதவி செய்கின்றனர்; ஊக்கமும் உணர்வும் கொள்கின்றனர். தொடக்க நாள் போலவே ஒவ்வொரு நாளும் நம் சங்க நிலையம் கண் கொள்ளாக் காட்சி யளிக்கின்றது. ஒவ்வொரு நாளும் மாலை 5-மணிக்குத் தொடங்கும் நிகழ்ச்சிகள் இரவு 12 மணிக்கு முன் நிறைவுறுவ தில்லை. தமிழ் மக்கள் காட்டும் உணர்ச்சியும் ஊக்கமும் சங்கத்தார்க்குப் பெரு மகிழ்ச்சியும் எல்லையில்லா வீறும் தருகின்றன; எம் உணர்ச்சியை எழுப்புகின்றன. கற்றுத் துறைபோகிய இயல், இசை, நாடக வாணர்களை அழைத்துச்

சிறப்புச் செய்தல் எங்கள் சிறந்த குறிக்கோளாகின்றது. அதுபோலவே அவர்களும் நம் தமிழ்ப் பெருமன்றம் ஏறிப் பணி யாற்றுதல் தமக்கு இணையிலாப் பேறும் சிறப்புமாகக் கருது கின்றனர். அவையினரும் அத்தகைய இசை வலைப்பட்டு மெய் மறந்ததாகக் கூறுகின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் தமிழ்ப் பெருமன்ற மேடை ஏறியதும், தம்மையே மறந்த நிலையில் உணர்ச்சி மேலிட, நல்லிசை வழங்குவதாகக் கூறுகின்றது குறிப்பிடற்குரியது. இத்தகைய நல்லுணர்ச்சியோடு நடை பெறும் முத்தமிழ்விழா ஏதொரு குறைபாடுமின்றி நிறைவுறும் என்பது ஒருதலை.

தொடக்கவிழாவிற்குத் தஞ்சை மாவட்டத் தண்டல் நாய கர் திரு. தி. கா. பழநியப்பன், M. A., I. A. S., அவர்கள் தலைமை தாங்கினார்கள். அவர்கள் தமிழ்த் தொண்டர்களால் எதிர் கொண்டழைக்கப்பெற்றுத் தமிழ் பெருமன்றத்திற்கு எழுந் தருளி நம் பைந்தமிழ் வளர்ச்சிக்கான தம் கருத்துக்களை அறி வுறுத்தினார்கள். அதன் பிறகு தொடக்கவிழாப் பேருரையாளர் சென்னை திரு. S. ஆறுமுகமுதலியார் அவர்கள், M.A., B.O.L., L.T., அவர்கள் "முத்தமிழ்ச் செல்வம்" என்னும் பொருள் குறித்து ஒரு சிறந்த விரிவுரை யாற்றினார்கள். அற்றைநாள் இன்னி சைப் புலவர் திருவாளர் திருப்பாம்பரம் T. N. சாமிநாத பிள்ளையவர்கள் அரிய வேய்ங்குழல் இன்னிசை வழங்கினார்கள். அதன் பிறகு நடனமணி திரு. லலிதா சுப்பிரமணியம் அவர் களின் சிறந்த நடனம் நிகழ்ந்தது.

இரண்டாவது நாள் திரு. S. ஆறுமுக முதலியார் அவர்கள் தலைமையில், குடந்தை, நகராட்சி உயர்நிலைப் பள்ளித் தலைமை யாசிரியர் திரு. S. சுந்தரேசச் செட்டியார் அவர்களால் "சமய மும் முத்தமிழும்" என்னும் பொருள் குறித்த அரிய விரிவுரை யும், மதுரை இசைவாணர் திரு. இரஞ்சிதமணி S. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் இசையரங்கும் நிகழ்ந்தன. மூன்றும் நாள் தஞ்சை மாவட்ட நடுவர் திரு. K. சீனிவாசன், I. C. S., அவர்கள் தலைமைதாங்கப், போதிநாயக்கனூர் புலவர் திரு. கான் முகம்மது அவர்கள் "மணிமேகலையின் துறவு" என்னும் பொருள் குறித்த அரிய விரிவுரையும், கொடுமுடி திரு. ஏழிசை வல்லபி K. B. சுந்தராம்பாள் அவர்கள் இசை விருந்தும் நிகழ்த்தினார்கள். நான்காம் நாள், இம் முத்தமிழ் விழா சிறப் புற நிகழ்வதற்குப் பலவகையிலும் அன்புடன் உதவி புரிந்து வரும் திருவாளர் V. நாடிமுத்துப் பிள்ளையவர்கள் தம் உடல் நலத்தின் பொருட்டாகச் சென்னையில் தங்கவேண்டியிருந்தால்

நம் சங்கத் தலைவர் தலைமை தாங்கினார்கள். சென்னைப் பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள், M. A., "இசையும் பொருளும்" என்பது குறித்துச் சிறந்த விரிவுரை வழங்கினார்கள். அதன் பின்னர் சென்னை திரு. T. C. கிருட்டினசாமி பிள்ளை அவர்கள் பேர்த்தி நாட்டிய கலாவல்லி திரு. மணிமேகலையின் நடனம் அவையோரால் பெரிதும் போற்றிப் பாராட்டப் பெற்றது. ஐந்தாம் நாள் கரந்தைக் கவியரசு திரு. அரங்க, வேங்கடாசலம் பிள்ளை அவர்கள் தலைமையில் தஞ்சைத் திரு. சாமி. வேலாயுதம் பிள்ளை அவர்கள், B. A., L. T., "பரிமேலழகர் சிறப்பை" அழகாக விரித்துரைத்தார்கள். பின்னர் கரந்தைத் திரு. T. R. தங்கவேல் பிள்ளை அவர்கள் இன்னிசை யரங்கு நிகழ்ந்தது. ஆறும் நாள் தஞ்சை மாவட்ட உதவித் தண்டல் நாயகர் திரு. G. M. முத்துசாமி பிள்ளை அவர்கள் தலைமையில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை ஆராய்ச்சியாளர் திரு. துரை. அரங்கனார் அவர்கள் "இலக்கியப் பண்பு" என்பது பொருளாக அரிய சொற்பொழி வாற்றினார்கள். இன்னிசை யரசு இசைச் செல்வர் கீழ்வேளூர் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் சிறந்த இசை யரங்கு நடந்தது. ஏழாம் நாள் செங்கரையூர் திரு. அ. பொன்னணுக் களத்தில்வென்றார் அவர்கள் தலைமையில் நம் புலவர் கல்லூரித் தலைவர் வித்துவான் திரு. உ. பழனி முதலியார் அவர்கள், M. A., "தமிழர் கடமை"யைத் தெளிவாகவும் விரிவாகவும் அழுத்தமாகவும் எடுத்துரைத்து அறிவுறுத்தினார்கள். தஞ்சைத் திரு. M. S. காந்திமதி யம்மை அவர்கள் இனிய இசை யரங்கும் மைசூர் முன்னாள் திவான் தம்புச்செட்டி அவாகள் பேர்த்தியும் புதுவை காலவே கல்லூரிப் பேராசிரியர் திரு. கொண்டப்பா அவர்கள் மகளுமான திரு. சுலோசனாவின் சிறந்த நாட்டியமும் நடைபெற்றன. கூரத்தாழ்வான்சேரி (கொரடாச்சேரி) அருட்டிரு. வாலையானந்த சுவாமிகள் எனும் சச்சிதானந்த சுவாமிகள் இயற்றிய "எறிபத்த நாயனார் புராணத்தின் மெய்ப்பொருள் விளக்கம்" எனும் சிறந்த நூல் அரங்கேறியது. எட்டாம் நாள் திருநெல்வேலி, இராவ் சாகிபு திரு. K. A. அருணாசலக் கவுண்டர் அவர்கள் தலைமையில் சேலம் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. வீ. உலக ஊழியர் அவர்களால் "தமிழும் இசையும்" என்னும் பொருள் குறித்த அரிய விரிவுரையும், அண்ணாமலை நகர்த் திரு. G. V. K. வேதவல்லியம்மை அவர்கள் இன்னிசை யரங்கும் சிறப்பாகநிகழ்ந்தன.

(தொடரும்.)

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

### முத்தமிழ் விழா வரவேற்பு.

### 14—10—51.

**மாண்பு மிக்க விழாத்தலைவர் அவர்களே,**

**செந்தமிழ்ச் செல்வர்களே,**

வணக்கம், நலம். உங்கள் அனைவர் வரவும் நல் வரவாகுக!

**தமிழ்த் தோன்றல்களே,**

இக் கரந்தைத் தமிழ்ச் சங்கமானது, தமிழவேள் திரு. த. வே. உமாமகேசுவரர், அவர் தம் பின்னோர், திரு. இராதாகிருட்டினர் இவர்கள் நன் முயற்சி, தொண்டு, உழைப்பு முதலிய பண்புகளின் பயனாகத் தோற்றமும், வளர்ச்சியும் பெற்றிருப்பது என்பது, திருவேங்கடங் குமரியாயிடையுள்ள தமிழ் கூறும் தொல் உலகும் பிற உலகும் நன்கறியும்.

நம் சங்கம், தமிழ் ஆராய்ச்சியின் மாநாடுகள், பேருரைகள், பொழில் வெளியீடு, நூல் நிலையப் புரப்பு முதலிய சிறந்த தொண்டுகளை ஆற்றிவரல் யாவரும் உணர்ந்தது.

கடந்த கால் நூற்றாண்டில் தமிழ் நாட்டில் தாய் மொழியின் நிலைமையும், தரமும் பல துறைகளிலும் பல படித்தானும், சீரும் செப்பமும் அடைந்துள்ளன வென்றால், அதற்குக் காரணம், நீறுபூத்த நெருப்புப் போல ஆரவாரமின்றி, இச்சங்கம் தன்னிலை திரியாது நாற்பது என்னும் ஆண்டுகளாகப் பலதுறைகளிலும் ஆற்றிவரும் தொண்டுகளேயாம் எனக் கூறுதல் மிகையாகாது.

கடந்த நாற்பது ஆண்டுகளாகத் தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் ஏற்பட்ட பற்பல சோதனைக் காலத்தும், தலை நிமிர்ந்து நின்று தமிழ் உரிமைகளையும் தமிழர் உரிமைகளையும் காத்துக் கொடுத்தது இச்சங்கம்.

தென்னாட்டில் பலவகைத் தமிழ்ச் சங்கங்கள் பற்பல நற்பெயர்கள்கொண்டு தோன்றித் தமிழ்த் தொண்டு புரிந்து வருவதை இற்றை நாளில் நாம் கண்டும் கேட்டும் மகிழ்கின்றோம்.

(201 ஆம் பக்கம் பார்க்க.)

# மணிமேகலை ஆய்வு (Criticism.)

வேலூர்க் காரழகன்.

(முற்றொடர்ச்சி: அணர் உமௌ, மலர் 6, பக்கம் 180)

மணிமேகலை புண்ணியராசனைக் கண்டு புத்த னருளைப் பகர்ந்து அரசனின் முற் பிறப்பை மொழிந்தமையால் அரசன் விழிப்புற்று நிலையாமையை நன்குணர்ந்து மணிமுடியும் செங் கோலும் சிம்மா தனமும் வாழ்வுக்குப் பயனில்லை யென்றுணர்ந்து இசையும், நாடகமும், காமமும், பலனில்லை எனத் தெளிந்து புத்த நெறியைப் பின் பற்றிப் பழம் பிறப்பை யுணர்ந்து வீடுற்றமையை எண்ணுங்கால் அரசாண்ட அரசனையும் புத்த நெறியில் திருப்பிய மாண்பு மணிமேகலைக் கன்றி வேறெவர்க் குண்டு?

மணிமேகலை சேர நாடு போந்து பத்தினிக் கடவுள் கண்ண கியை வழிபட்டு, தலைவ னிறக்தபொழுதே இறவாமைக்குக் காரணம் கோரிய ஞான்று கணவனுக் குற்ற கொடுமையால் உள்ளங் கொதித்த தென்றும் நல்வினையால் விண்ணகம் புகுந்தாலும் மதுரையை எரித்தமையால் தீவினை தொடரு மென்றும் தேவருலகில் நல்வினை யின் றேல் மீண்டும் மண் ணுலகில் பிறந்துலவ வேண்டுமென்றும் பத்தினிக் கடவுள் கூறியதை யுன்னுங்கால் மண்ணகமே வீடுபேற்றிற்கு அடிகோலு மென்றதுடன் மண்ணகத்தில் செய்யும் வினைக் கேற்பவும் விண்ணகத்தில் செய்யும் வினைக் கேற்பவும் யாவும் நிகழு மென்பதை உரமுடன் வற்புறுத்தல் இனிதே விளங்குவதால் என்றும் நல்வினையையே மக்கள் ஆற்ற வேண்டுமென்று உணர வைக்கிறது.

மணிமேகலை கஞ்சிமா நகர் சென்று பட்டினியாலும் பசியாலும், அவல மெய்திய மக்களுக்கு உணவு நல்கி, புத்த நெறியை நவின்று மன்னுயிர்க் கெல்லாம் உணவும், உடையும்,

வீடும் அளித்தலே அற மென் றுரைத்து, அறவணடிகளை யடைந்து உண்மைப் பொருளை யுணர்த்துமாறு வேண்டிய பொழுது, மாரனை வென்று, காமம், வெகுளி, மயக்கம் இம் மூன்றினையும் வெல்ல வேண்டு மென்றும், தீவினைக்குரிய பத்துப் பாவங்களைக் கடந்து, பஞ்ச சீலத்தைப் பற்றி, பற் றறுத்து, செற்றம் சிதைத்து, நற்பொரு ளறிந்து, மயக்கம் மாய்த்து, புத்த நெறி ஏகல் வேண்டுமென்றும் கூறி, 'உன் மனத்திருளிரிக ; பவத்திறமறுக,' என உரைத்து மணிமேகலையை இறவாத் தன்மையளாக்குவித்தார் அறவண அடிகள்.

அணங்காய்ப் பிறந்த மணிமேகலை தாய் தந்தையர்க்குற்ற கொடுமையால் உலக மூறுடைத் தெனத் தேர்ந்து துறவியா யிருந்தும் உதயகுமரனால் தொல்லை ஏற்பட்டும் அதனினின் றகன்று மூற் பிறப் புணர்ந்து, உணவு அனைவர்க்கும் அச்சய பாத்திரத்தா லளித்து, ஆதிரையிடம் பிச்சை யேற்று, புத்த மந்திரத்தால் கொடுமைகளினின்று நீங்கி, கற்பு நெறியே மேலான தென்றுணும் அறவண அடிகளைப் புகலிடமாகக் கொண்டு அரசனையும் துறவு நெறிக் கேக வைத்து, வினைவழி யாவும் நீகழுமென் றுணர வைத்து, உணவும், வீடும், உடையு மளித்தலே அறமென்றவனிக் கறைந்து அழியாப் புகழுடன் திகழும் மணிமேகலையும் அப் பெயரால் சீத்தலைச் சாத்தனர் தண்டமிழ்த் தங்கக் கோலால் பீடுடன் பிறங்கும் பெரும் பனுவலும் வாழ்க ! வாழ்க !! வாழ்க !!!

---

## பிழை திருத்தம்.

தமிழ்ப்பொழில் துணர் 27, மலர் 3, பக்கம் 82
" உயிரின் ஆற்றலை உணர்க " என்ற பாட்டில் திருத்தம்.

| பிழை | | திருத்தம் |
|---|---|---|
| கந்தகம் | ... | கந்தம் |
| வினிலே | ... | வீணிலே |
| சோர்வை | ... | சோர்வடை |

# பாரதியாரின் தத்துவம்

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை, B. A., B. L., தஞ்சை.

உலகில் அழகில் மிக் குயர்ந்தவை வெகு விரைவில் வாடுவது கண் கூடு. ஆனால் வாடிய பின்னும் அவற்றின் மணம் உண்மையாய தத்துவங் கொண்டு உலகெங்கும் வீசுவது இயற்கை. இத் தகைய சிறப்பு உண்மைக் கவிஞர் பாலுண்டு. ஏனெனில் அவர் தம் கவிதையில் சொல்லாற்றின் சுவை ததும்பி யிருப்பதால், அச் சுவையினில் நம் மனம் படியுந்தோறும் சொற்கள் ஆன்மக் கனல் வீசும் விண் மீன்களாக விளங்குகின்றன. சொல்லாற்றல் மூலம் இதயம் பொருளொடு பொதிந்து பின்னியவழி, உள்ளத்து இயற்கையின் ஆற்றல் கிளரப் படவே, இதயம் உள்ளத் துடிப்பாக மாறுகிறது. மாறவே, கவிவாணர் பால் சுரந்து அமைதி வாய்ந்த இயற்கையின் சக்திகள் யாவும் கற்பனைப் பொலிவால் பல்வேறு உருவமும் தத்துவமுங் கொண்டு உலகிசையுடன் பொருந்தி நிலவுவதைக் காண இயலும். அச் சக்திச் சுழல்களுக்கு ஆனந்தம் தருவது அறிவு மிளிரும் தத்துவமும், புரட்சி தரும் விரைவுமே.

இத் தகைய இயற் கவிதை நம் பாரதியாரது உள்ளத்திலிருந்து, கண்களில் நீர் ததும்புவது போன்று, இயல்பாக முகிழ்த்தெழுகிறது. பாரதியாரது உள்ளத் துடிப்பிலிருந்து இயற்கைச் சக்தியின் ஒவ்வொரு அணுவும் தத்துவ விளக்கங் கொண்டு கவிதையின் வழி, கலை நடம் புரியவே, பாரதியார் அச் சக்திச் சுழலில் உள்ளத்தைப் பறிகொடுத்து தானுணர்ந்த உண்மைகளுக்கு வீரியத் தினவால் அணி செய்து அவைகளின் உட்பொலிவின் கவர்ச்சியில் சொக்கி நிற்பார். உடனே கோல் வெறி பிடித்தவர் போன்று துன்பப் புயலில் ஆட்டமாடி இடி மேகங்களுக்கிடையே அலைந்து திரிந்து வாழ்வின் கட்டுகளை ஆவேசத்துடன் மனம்போனபடிவெட்டி வீழ்த்திப் பாட்டிசைப்பார். வாழ்வுப் புழுதியில் தன் சிந்தனைச் சிதர்களை கலைப் பித்தனைப் போல் சிதற விடுவார். பின்னர், உன்மத்தங் கொண்டு, அடைபட்டிருந்த சுதந்திரக் கதவின்

தாழ்ப்பாளை நீக்கி, இயற்கைச் சக்தியின் மடி மீது இக் கவிச் சித்தன் தனது உள்ளத் துடிப்பை படிய வைத்து வெதும்பித் தளர்வார். பின் அவ் வண்ணமே யிருந்து நித்தியானந்தத் தில் உறங்கிப் போவார்.

இயற்கைச் சக்தியின் ஆற்றலை நன்கு தேர்ந்து உடலை மறந்து வாழ்ந்த பாரதியார் இழந்த சுதந்திரத்தை மீண்டும் பெற அச் சக்தியின் துணை வழி, அச்சத்தினின்று அச்சத்தை வெல்லும் முறை கண்டு தியாகம் செய்யும் வகை யினை உணர்த்தினர். சக்தி உயி ரென்றும், அதனைச் சூழ்ந் திருப்பது புத்தி யென்றும் புகட்டினர். இதுவே பாரதியார் கண்ட அடிப்படையான தத்துவ மாகும். இதனன் சுதந்திர சக்தி அரசியல் வாழ்விலும் கவி யுலகிலும் நடமாடிப் புது மலர்ச்சியினை மக்களுக்கு அளித்து அடிமைத் தளையினை அழித்தது. உலகை இயக்கும் சக்தியின் காட்சியினைக் கண்ட பாரதியார், யாவரது அபிப்பிராயத்தையும் நாடாது, உள்ளெழுச்சியால் தம் கனவுகளைத் தத்துவங்கள் தோன்ற இயல்பாகப் புள்ளினங்கள் போல் இசைப்பாராயினர். இம் மெய்க் காட்சியில் இழைந்த பாரதியாரது சுதந்திரக் காதலே அவரது கலை. அக் கலையே அவரது சமயம்.

பாரதியார் குவலய மீதில் வெற்று வாழ்க்கையினை விரும்பியவ ரல்லர். தம் முடலை மறந்து உள்ளுலகில் பெரும் பித்துடையார் போல் வாழ்ந்தவர். அவர் சக்திப் பெரு மகளிரது பெருமையினை உணர்ந்து, ஊக்கமும் உள் வலியும் உண்மையிற் பற்று முற்றுரே தம் மகத்தில் தெய்வச் சக்தி களை நிலைபெற வைத்துத் தெய்வக் கனலை வளர்க்கும் பான்மை யால் நரத் தன்மையினின்றும் விடுபடுவ ரென்றும் அறி வுறுத்துவார். நான் மறை முடிவில் விளங்கும் சக்தியில் வெற்றிதரும் நெறி யுண்டென்ற உண்மையாய தத்துவத்தினை உலையிலே ஊதி உலகக் கனலை பாட்டினிலே பயன்பட வைத்தார். பாட்டினிலே சொல்லுவது சக்தியின் கூற்றுகு மென உணர்ந்த பாரதியார், அச் சக்திக்குக் கவியணி செய்ய வெறி கொண்டு இலக்கண நெறியையும் அமைதியையும் மீறி இசை, பொருள் என்பவற்றையே போற்றி இலக்கியப் புரட்சி கண்டார். காலப் புயலால் நாகரீகமும் அரசியல் கொள்கைகளும் மாறி வர, குறுகிய கால அளவில் மக்கள் அறிய வேண்டுவது மிகவாதலின், இந் நிலையில் சற்று கருத்

தூன்றி ஆழ்ந்தும் தெளிந்தும் கற்க வியலாது தவிக்கும் மக்களுக்கு ஊக்க மூட்டவே இவரது பாக்கள் எழுந்ததினுன், காலத்திற் கியையத் தமிழிலக்கியம் புரட்சியையும் புதுமை யையும் கொண்டது.

பாரதியார் உலகமே பொய் யென்றும் மாயை யென் றும் கூறுவாரது குருட்டு வழியில் செல்லாதவாறு மக்களை 'மாயையைப் பழித்தல்' என்ற பாவின் மூலம் விழிப்புறுத்து வார். அன்னவருக்கு நல்லுணர்வுகளையும் வளர்த்துப் புத்தம் புதிய எண்ணங்களை உள்ளூரத் தோன்ற வைத்தார்.

காண்ப தெல்லா மறையு மென்றால் மறைந்த தெல்லாம் காண்ப [மன்றோ?
வீண் படு பொய்யிலே—நித்தம்
விதி தொடர்ந் திடுமோ?
காண்பதுவே யுறுதி கண்டாய், காண்ப தல்லா லுறுதியில்லை
காண்பது சக்தியாம்—இந்தக்
காட்சி நித்தியமாம்.

என்பது பாரதியார் வாக்கு.

காற்றும் கதிரும் போலக் கட்டின்றி மக்கள் சுதந்திரமாக வாழப் பாரதியார் பெரிதும் விரும்பினர். சுதந்திரம் மக்களின் பிறப்புரிமை யென்றும் அதுவே வினைத்திறன் என்றும் மக்களுக்கு அறிவுறுத்திச் சுயேச்சையின் வீர வுணர்வை நாட்டு மக்களுள்ளத்தில் 'அச்ச மில்லை' என்ற பாவின் மூலம் விதைத்தார். அடிமைத் தளையினை அகற்றி உள்ளத் தில் அன்புக் கனல் வீச, அறத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு, உண்மை யறி வொழுக்க ஒளியில் வீரத்தைப் போற்றி மக்கள் நடந்தால் எத்தகைய இடுக்கணும் இரிந்து போகு மென்றும், அதுபோது தான் மக்கள் தானாகத் தன் னுணர்வு கொண்டு வாழ இயலும் எனச் 'சுதந்திரப் பெருமை,' 'சுதந்திர தாகம்,' 'சுதந்திரப் பள்ளு' முதலிய ப்ாக்களின் மூலம் பாரதியார் நிலை நாட்டினர்.

தேவி! நின் ஒளி பெருத
தேய மோர் தேய மாமோ!
ஆவி யங்குண்டோ? செம்மை
அறிவுண்டோ? ஆக்க முண்டோ?

என பாரதியார் சுதந்திர தேவியினை விளித்துக் கூறியது உள்ளத்தை உருக்கும் தன்மைத்து.

மக்கள் சுயேச்சையாகவும் மகிழ்வாகவும் ஒற்றுமை நலனுடனிருக்க, அவர்கள் செய் தொழிலில் கருத் தூன்றி முயற்சியினை கடைப்பிடிக்க வேண்டுமென்றும் இறைவன் சோம்ப லுடையார் மூலம் தனது செயலை விளங்க வைக்க மாட்டா ரென்றும் பாரதியார் எடுத்துக் கூறி ஞால வாழ்வில் கோல வான் றொழில்களின் பெருமையினை மக்களுக்குக் 'தொண்டு செய்யும் அடிமை' என்ற பாவின் மூலம் உணர வைத்தது அறிதற் பாலது.

சக்தி, இயற்கை நடுவேயும் மனிதத் திறனுக்கு அப்பாலேயும் உள்ளதெனக் கண்ட பாரதியார், அறிவும் அன்பும் முதிர மக்கள் இயற்கைச் சக்தியிடம் மன மூன்ற வேண்டுமென்று அறிவுறுத்தி, சக்தியைப் பணிவதே நமது கடனென்றும் தம் பாக்களிலே திடமுடன் காட்டி யிருக்கிறார். சக்தி மக்களுள்ளத்தில் விளங்கும் பெற்றிமை கண்டு அதுவே உயிர் முழுவதூஉம் பரவி மக்கள் மூலம் நற் செயல் புரிவதாகப் பாரதியார் கருதினார். ஆதலால் சக்தியில், மக்கள் ஒற்றுமை யுணர்வுடன் ஊன்றி வாழ்ந்தால் பழைய குருட்டு எண்ணங்களும், பொருளற்ற பழக்க வழக்கங்களும் பறந் தோடிப் போக மெய்க் காட்சி புலனாகு மென்பதும் இன்ப நிறைவும் கைகூடு மென்பதும் பாரதியாரின் சீரிய கொள்கை. அதனாற்றான் அவர், தனிமையில் தன் னெண்ணப் படி வாழ்வது மக்களுக்கு எளிதாயினும், அன்னார் கலந் தொன்றி இன்ப நிறைவுடன் தனிமையின் சுயேச்சையினைக் காக்க வேண்டுமென்றும் வற்புறுத்தினார். இவரது வாக்கு சக்திக் களிப்பில் ஊறி வாழ்வதால் அவருள்ளத்தில் தன் னம்பிக்கை என்ற நந்தி தானாகவே மீட்டியது கருதற் பாலது. உள்ளார்ந்த ஆத்மக் காதல், உறுதி, அச்சமின்மை, இவையே பாரதியாரின் தத்துவம்.

வாழ்வின் குறிக்கோளையும் உண்மைகளையும் சுய நலத் திற் கின்றி உயரிய நிலையினின்று சிந்திப்பது பாரதியாரது வாழ் வியலின் தத்துவம். சுய நல வாழ்வு பாரதியாருக்கு துக்கமுறும் வெறுமையே. 'சரஸ்வதி தோத்திரம்,' 'சரஸ்வதி தேவியின் புகழ்,' 'தேவி துதி,' 'லக்ஷ்மி பிரார்த்தனை,' முதலிய பாக்கள் இதற்கு நேரிய சான்றாகும். இப் பாக்களின் மூலம், உள்ள மெல்லாம் உள்ளுறை யென்றும், சக்தியின் பால் தழைக்கும் அருளறத்தின் விளக்கத்தின் வழி

மண்ணுலகம் விண்ணரசைப் பெறுமென்றும், தன்னடக்கமே வல்லமையென்றும், அமைதியே ஆற்றலென்றும் அறிவுறுத்தினர். மற்றும் இயற்கையின் அமைதி உடல் நலமே யன்றி நோயன்றென்றும், மக்கள் முயற்சியின்மையால் பிறர்பால் வலிந்து பெறுவது நோய் என்றும், நோதல் தன்னுறுதியின்மையினையும் ஆற்றலின் குறைவினையும் எடுத்துக் காட்டும் எனவும் புகன்றார். இஃதோடமையாது, செயல் வாழ்வு தோற்றம் முதலியவைகளுக்கு நினைப்பே ஊற்றுக் கண்ணாய் விளங்குவதால் நல்ல நினைப்பே மடமையினையும் கவலையினையும் துக்கத்தினையும் போக்குமென்றும் இன்ன பல உயரிய தத்துவங்கள் மக்களுள்ளத்தில் அழுந்திப் படியுமாறு விளங்க வைத்தார். தாழ்ப்பினைக் கண்டு தளராதே என்று உறங்கும் நாட்டு மக்களைத் தட்டியெழுப்பி மெய்க் காழ்ப்பினை அன்னார் காணுதற்கு காத்திருக்க வேண்டிய வகையினை மக்களுக்குப் பாரதியார் எடுத்துரைக்கும் மாண்பு இதயத்தை ஊடுருவிச் செல்லும் தகைமைத்து. மக்கட் பண்புகளையும் மனோ பாவ எண்ணங்களையும் உருவகப் படுத்தி தனது தத்துவத்தின் வழியாக அமர ஞானம் அளிக்கும் பாரதியார், கவியுலகின் அற்புதமெனக் கண்டுகொள்க.

நாட்டுப் பற்றுக் கிளக்கும் பாரதியாரது கீதப் பகுதி சுதந்திர இன்ப வாழ்விற்கு ஓர் திறவு கோலாய் வாய்க்துள்ளது. இக்கீதங்களில் கவிதைச் சிறகின் துடிப்பினையும் அவர் உள்ளத்துள்ளே ஊறிக் கிடக்கின்ற சிந்தனையின் தினவினையும் காண இயலும். மனிதன் எல்லையற்ற ஆன்மா என்றும், மக்களெல்லோரும் ஒன்றே யென்றும் அன்னது போன்றே மதங்களும் எனவும் உபதேசிப்பார். ஆன்ம ஞான செல்வத்தை வியந்து பாராட்டும் இவரது 'கண்ணன் பாட்டு,' 'ஜீவன் முக்தி,' 'தெளிவு,' 'நெஞ்சொடு கிளத்தல்,' 'அழகுத் தெய்வம்,' 'அறிவே தெய்வம்,' 'ஒளியும் இருளும்' முதலாய பாக்களில் வீறிய கவிதை நலன், இவர்பால் மிளிரும் அத்வைதக் கொள்கையின் தத்துவ விளக்கத்தைப் புலப்படுத்தும்.

அறம் பற்றும் அத்வைதக் கொள்கையினருக்குத் தலைவராக விளங்கும் பாரதியார் சமூக சீர்திருத்தக் கொள்கையினருக்கும் முதல்வராயும் திகழ்ந்தார். நாட்டுப் பெண்கள் தமக்குப் பொருந்திய கல்வியும் செல்வமும் நல்லறமு

முடையராயிருத்தல் வேண்டு மென்றும், வதுவை மணம் முடியு முன் நாயகன் நாயகியராயிருப்பவர் கண்டு, காதல் கொண்டவராயிருத்தல் வேண்டு மென்றும் பாரதியார் கருது வது 'பெண்கள் விடுதலைக் கும்மி' மாதர்க் குண்டு சுதந்திரம்' என்ற அவர் பாக்களின் மூலம் தெளிவாம்.

நாட்டு மக்களின் உயர்விற்கு அடிப்படை புத்தம் புதிய கலைக ளெனவும், தேர்ந்த கல்வியும், வாக்கொளியும் வையக வாழ்வில் வயங்க வேண்டு மென்றும், திறமான புலமை யாதெனின் அதனை வெளிநாட்டார் வணக்கம் செய்தல் வேண்டு மென்றும் பாரதியார் 'தமிழ்' 'தமிழ்த் தாய்' முதலிய பாக்களில் உணர வைத்தது அறிந்து இன்புறற் பாலது. மற்றும் தூய தமிழைக் கற்று பாந்த தமிழறிவு வாய்க்கப் பெறுவார்க்கு பேருவகை தோன்றும் உயரிய தத்துவத்தை அப் பாக்களில் பாரதியார் நுண்ணியதாய் விளக்கி யிருக்கும் பான்மை கருத் திருத்திக் கொள்ளற் பாலது. பல ஆற்றலும் வாய்ந்து வெடிபடும் அண்டத்திடி யேருகவே தமிழ் மொழியை பாரதியார் சமைத்துக் கிளக் கும் பாக்கள் 'வான மளந்த தனைத்து மளந் திடு' வண்மை யினையும் மொழியின் ஓய்வற்ற எழிலின் தத்துவத்தையும் புலப்படுத்துவது சிந்தித்து உணரற் பாற்று. அறியாமையை யும் மனக் கவலையையும், சாதி மத வேறுபாடுகள் பாராட்டும் பண்பினையும் ஒழித்து தூய அறிவொளியினைப் புலப்படுத் தும் கல்வி முறைகளையும், காட்சியையும், உயிர் நாட்டுப் பற்றில் மூழ்கி, முயற்சியைப் பற்றி, வாழ்வின் பயனை அடை யும் ஆக்கங்களையும் 'பாரத மாதா திருப்பள்ளி யெழுச்சி'யில் காண இயலும்.

அன்பும் வீரமும் நாட்டு மக்களினின்று பெரிய கவலைச் சுமையினை நீக்கு மென்றும், திறத்தால் எளியையாகி செய்கை யால் உயர்ந்து வாழ்வின் உரிமையினைக் காத்து நிற்கும் நெறியே சீரிய தென்றும் கூறும் கொள்கைகளின் அடிப்படை யில் பாரதியாரது உட் கனவின் சொல்லோவியமாகிய கவிதை யின் ஒளி நிலயம் அமைந்துள்ளமை வகையுறுத்தி நோக்கின் அவர்தம் கவிதையின் அருமை நன்கு புலப்படுவதாயிற்று. தமிழ் நாட்டைத் தாய் நாடென்று பாரதியார் நினைக்குங் காலை அவர துள்ளத்தில் அன்பு வீறிட்டுப் பெருகுவதும், தந்தையர் நாடென்று கூறுங்காலை ஆண்மையும் வீரமும்

# நடுவு நிலைமை!

தி. ச. வாசுதேவன், திருச்சி.

**இராகம்: தேவகாந்தாரி.** **தாளம்: ஆதி.**

**எடுப்பு.**

நடுவு நிலைமை தவறாதே மனமே
ஞானிவள் ளுவனின் சொல்லை மறவாதே (ந)

**தொடுப்பு.**

மடுவுபோல் சூழ்நிலை வஞ்சம் சூழ்ந் தாலும்
மனம்தரும் அறந்தனை துணைகொள்வதே சாலும் (ந)

**முடிப்பு.**

பெற்றவ ராயினும் கற்றவ ராயினும்
பெருமைக் குரியமற்றும் எவருமே யாயினும்
நற்றவ மாமுயர் வெற்றியில் தோயினும்
நாடிய செல்வம்கோடி கூடினும் போயினும். (ந)

---

*அருள் வலியும் உள்ளம் கவர்ந் தெழுந் தோங்குவதும் 'செந்தமிழ் நாடு,' 'பாரத நாடு,' 'எங்கள் நாடு' முதலிய பாக்களில் நுனித்துணருங்காலை பாரதியாரது நாட்டுப் பற்றின் தத்துவம் தெவிட்டாச் சுவையினை பயப்பதாகும்.*

*ஆயுங்கால், பாரதியாரின் பாக்கள் சிறந்த கவிதை யணிந்த கால விமரிசை. சிற்சில பாக்களில் யாப்பிலக்கண வரம்பு நிலையினைக் காண இயலாது போயினும், அவை, ஒள்ளொளி ததும்பும் தத்துவ அமைதியுடன் பண்ணேறி வயங்குவது வெள்ளிடை மலை. மக்களுக்கு ஆக்கம் தரும் நோக்கங் கொண்டு புத்தம் புதிய உணர்ச்சியினையும் தத்துவப் பொலிவினையும், தன் கவியுள்ளத்தே யெழும் அலையாய யுணர்வால் பாரதியார் பண் படுத்தி மக்களை விழிப்புறுத்தினார். மற்றும் கடமை யுணர்வினையினையும் புகட்டி 'ஒன்று பிரம முள' துண்மையினை உணர்வாகக் கொள்ள, சக்தியின் ஆற்றலை நவின்றார். இவை யாவையும் நோக்குழி வாழ்வின் தெளிவு நிலையினைக் காட்டும் இவரது தத்துவக் கொள்கைகள், நெடுங் காலத்திற்குப் பின்னர் நிகழக் கூடிய செயல்களை முன்னரே முன் கூட்டி விளக்கிக் காட்டும் பரிசு வாய்ந்தவை யென்னும் மெய்ம்மை தேறப்படும்.*

இராகம் : சண்முகப்பிரியா. தாளம் : ஆதி.

பல்லவி

நாடுவதேனோ சொல்லடி—என்
நாதன் எனவே நம்பியிவ் வுள்ளம் (நாடுவ)

அனுபல்லவி

வீடுவாசல் இன்றி விதிதலை ஓடேந்தி
மாடுமேல் ஏறிச்சுற்றும் மதிப்பித்தன் சேய்தனை (நாடுவ)

சரணம்

அண்ணன் பெருவயிற்றோன் அதிலும் கரிமுகத்தோன்
அன்னையை எண்ணினால் அவளும் முழுநீலி
எண்ணில் வடிவாகும் இவனோ ஓர்ஆண்டி
இடையர்குலத் திருடன் இவன்மாமன் ஆயினும் (நாடுவ)

---

இராகம் :- நாட்டை தாளம் :- ஆதி.

பல்லவி

காத்தருள்வாய் கணபதியே — இன்பக்
களிதரும் குணநிதியே (காத்தருள்)

அனுபல்லவி

ஏத்துநல் லன்பர்க்(கு) இதம் செயும் கோவே
இழிவினை நீக்கும் எழிலுறு தேவே (காத்தருள்)

சரணங்கள்

வசந்தமும் தென்றலும் வந்தது போன்ற
வாழ்வில் நலன்ஆயும் வகையது தோன்ற
பசுந்தமிழ்த் தேனதின் பலனில் உவந்து
பலகவி சொல்லும் கலமது தந்து (காத்தருள்)

ஊக்கமும் வளர்ந்து உணர்வது தோன்றி
உண்மையும் சைவமும் உறுதியும் ஊன்றி
ஆக்கமோ டுயர்ந்த அறமது சேர்ந்து
அன்புடன் ஞானமும் இன்பமும் ஈந்து (காத்தருள்)

# இறைவனின் இனிய பரிசு!

அ. பழனியப்பன், பலவான்குடி.

“ நட்பு ” இறைவனின் இனிய பரிசு! பெறற் கரும் பேறெனப் பிறங்கி, பெரு நலம் பயப்பது நட்பு. மக்கள் தத்தம் இயற்கைப் பண்பறிந்து, ஒருவரோ டொருவர் இணைந்துற வாடி இன்பந் துய்த்தலே நட்டல் எனப்படும். ஒத்த பண்புடையார் இருவரைக் காண்ட லரிதெனினும், ஒருவரோ டொருவர் இணைந்து ஒன்றுபட்டு வாழ்தலைக் காண்கின்றோம். அத்துணைப் பண்பினுலும், ஒத்த இருவரைக்

---

இராகம் : சாவேரி. தாளம் : மிஜெம்பை.

பல்லவி

ஒருறுதி கொள்ளுதல் வேண்டும்—உலகில்
உண்மை யாகிய உயர்நிலையைக் காணவே (ஒருறுதி)

அனுபல்லவி

சீருறு தியானமே செய்தல் வேண்டும்—பிற
தெய்வமே இகழாத மெய்யறிவு வேண்டும் (ஒருறுதி)

சரணங்கள்

பேசுவதில் இனிமை பிரியாமை வேண்டும்
பேதைமை யறுக்கநூல் ஆராய்தல் வேண்டும்
மாசுபெறு வஞ்சகர் தீமையே செய்தாலும்
மனதிலும் செயலிலும் நன்மையே வேண்டும் (ஒருறுதி)

நாடுவதில் அறிவார்ந்த நல்லவர்கள் வேண்டும்
நடுநிலைமை தவருத நலமுறுதல் வேண்டும்
தேடுவதில் அன்பரைத் தேர்ந்தடைதல் வேண்டும்
திகழுநற் சிந்தையில் தெளிவுபெற வேண்டும் (ஒருறுதி)

தாழ்வுவர நேரினும் தளராமை வேண்டும்
தன்னலம் கருதாத தன்மைமிக வேண்டும்
வாழ்வுநிலை குன்றினு மகிழ்வடைதல் வேண்டும்
வரவிலும் தடுமாறி வழுவாமை வேண்டும் (ஒருறுதி)

—o—

குறிப்ப தருமையே அன்றி, தலையாய பண்பினு லொத்த இருவர், ஒருவரை மற்றவர் தழுவி நடந்து, ஏனைய பிற பண்பினை இறுகப் பற்றி யொழுகா தொழியினும், இணைந் திருந்து வாழ்தலே இன்ப மெனக் கொண்டு நட்டலைக் காண் கின்றோ மல்லமோ! 'புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சி தான் நட்பாம் கிழமை தரும்' என்று கூறி உணர்வின் வழி ஒன்றுபடும் உண்மையை விளக்குகின்றார் திருவள்ளுவர். இன்ப துன்ப மிரண்டினும் இடையறாது உதவி நின்று, பொன்றாத் துணை யெனப் பொருந்துவதே 'நட்பு' என்பது உன்னி உணர்வோர்க்குத் தெள்ளிதிற் புலனாதல் எளிது! சுருங்கக் கூறின், இயல்பினு லமையும் இன்றியமையாத் துணையே ஏற்ற நட்பு எனலாம்.

மக்கள் தம் வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப் பெறுவது 'நட்பு' என்றும், அஃதின்றேல் வாழ்வு வளம் பெறாது என்றும், வலியுறுத்தி நன்னூல் பல நல்கி, நமக் கறி வுறுத்திப் போந்தனர் நந் தமிழ்ப் பேரறிஞர்கள். தமிழ் மறை அருளிய தனிப் பெருந் தலைமை வள்ளல் திருவள்ளுவப் பெருந் தகையாரும், நட்பின் சிறப்பை நன்கறிந்து, ஐம்பது குறள்களில் மிக அழகாக விளக்கி யிருக்கின்றார் என்றால், அதன் இன்றியமையாத் தன்மையை இயம்பவும் வேண்டுமோ!

ஒருவன் தனதுண்மையான பண்பினை ஓர்ந்து, அப் பண்பினு லொக்கும் பிற னொருவனைத் தேர்ந் தெடுத்து, அவனையே தன துற்ற நண்பனாக்கிக் கொண்டு இன்புறுவ தியல்பு. பண்பு எத்தன்மைத்து என்பது ஈண்டு கூர்ந்து நோக்கற்பாலதேயாம். 'பண்பு' எனும் தனித் தமிழ்ச் சொல் இன்று ஆட்சியி லில்லை! அதற்குரிய இடத்தை 'குணம்' ஏற்று நிற்கின்றது. நல்லதும் அல்லது மாய பண்புகள். தத்தம் இனவழி நின்று இயங்குவ இயல்பே எனினும், அததன் வழியில் கூடும் அத்துணைப் பண்புகளும் சேர்ந்திருந்து சிறப்பிக்கும் தன்மையி லில்லை என்பது கண் கூடு.

நட்பை நாடி நன்மை பெற விரும்பும் ஒருவன், முதன் முதலாகத் தன்பா லமைந்து கிடக்கும் பண்பு எத்தன்மைத்து, என்று உன்னி உணர வேண்டும். அது நற் பண் பென அறிந்தால், ' பெறற் கரும் பேறு பெற்றேன் ' என மகிழ்ந்து, அப் பண்பு மென் மேலும் பெருகிச் சிறக்க, ஒல்லும் வகை செய்தல் வேண்டும். நல்ல தல்லாத பண்பு என்று நாளடை வில் உணர்ந்தால், அதன் வழி நின்று, தீய பண்புடையாரோ டிணங்கி, தீயதை வளர்த்துத் தீங்கிழைக்காது, மனத்தைத் தன் வயப்படுத்தி நல்வழி நடாத்த முனையவேண்டும். அஃது அரிதென்று அசாவாமை வேண்டும் ; முழுமனத்துடன் முயன்றால் நாளடைவில் வெற்றி கண்டு மகிழலாம் !

நற் பண்புகளும், தீய பண்புகளும், பலதிறப்பட்ட மக்க ளிடத்தும் பலவிதமாக அமைந்து, நன்மை தீமைகளை விளை வித்து, பெருமையும் சிறுமையும் அடைவதற்குக் களமாக இருக்கின்றன என்பது வரலாற்று வாயிலானும், கண்முன் நிகழும் நிகழ்ச்சிகளானும் நன்கறியக் கிடக்கின்றது.

நல்ல பண்புகள் வாய்க்கப் பெற்றார் இருவர், ஒன்றுபட்டு வாழ முயன்றும் முடியாது வேறுபடுதலையும், நல்லதல்லாத பண்புடையார் மாட்டும் ஒற்றுமை நிலவாமல் பிரிந்து திரி கின்ற நிலையையும், அன்றாட வாழ்க்கையில் காண்கின்றோம். இஃது இயற்கையோ டொப்பாமை தெளிவு !

அமைதியாக ஓரிடத்தமர்ந் திருந்து, பல நல்ல நூல் களைப் பயின்று, அதனுட் பொருளை ஆய்ந்தறிந்து மகிழும் பண்புடைய அறிஞரும், ஓய்வுறு பொழுதெலாம் நல்லறிஞர் உறைவிடம் சென்று, அளவளாவிப் பேசி மகிழ்ந்து, அறிவு வளர்ச்சியை நாடும் மற்றொரு அறிஞரும், நற்பண்பின்வழி ஒன்றுபடாது வேறுபட்டு, ஒருவரை மற்றவர் குறை கூறித் திரிகின்ற தன்மையையும், கள் விரும்பிக் குடித்துக் கூத்தாடி மகிழும் வெறியனும், காமவுணர்ச்சி மேலிட்டுக் கற்பழித்துக் களியாட்டமாடிக் களிக்கும் கயவனும், தீய பண்பின் வழி

நின்று, சேர்ந்துவாழாது சிறுமை பேசித் திரிகின்ற இழி நிலையையும், உற்று நோக்குழி, பண்பு ஒற்றுமையிலும் வேற்றுமை யுண்டென்பது குன்றின்மேல் விளக்கெனக் கூறாது புலனாகும்!

'நிலத் தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு இனத் தியல்ப தாகும் அறிவு' என்ற தமிழ் மறையின் பொருள் தெரிந்து, ஆய்ந் தறிந்து நல்லார் கேண்மை கொள்ள வேண்டும். பகுத் தறிந்து கொள்ளாத நட்பினால், ஒருவன் அடையும் துன்பத்திற்கு அளவே யிராது. 'ஆய்ந் தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை, தான்சாம் துயரம் தரும்' என்று கூறி எச்சரிக்கின்றார் பொய்யா மொழிப் புலவர்.

பண்பினா லொத்த இருவர் அன்பு கொண்டொழுகிப் பழகுவதா லமைவது நட்பு என்று கூறி, அதன் ஒற்றுமையில் வேற்றுமையு முண்டென்று விளக்கினோம். 'நட்பு' இன்றி யமையாதது என்று கருதும் ஒருவன், குறிப்பிட்ட மற்றொருவனின் பண்பு எத் தன்மைத் தாயினும் அதனைத் தழுவி நடந்து, அவன் தன் நட்பைப் பெற்றே தீர வேண்டு மென்ற முடிவிற்கு வந்து விடுகின்றான். அது போழ்து நல்ல தல்லாத பண்பினைப் பகுத் தறிந்து நீக்கும் தன்மையை இழந்து, உணர்ச்சியே வடிவாகி விடுகின்றான். உணர்ச்சியுடன் அறிவு கலந் தொளிர்ந்த சிறு பொழுதில், 'தாம் ஏற்ற நட்பு தீயது' என்று அறிந்து வருந்துகிறான். ஆய்ந்தறியாது நட்ட பின், நண்பனின் பண்பினை ஓர்ந்து அவன் தன் நிலை அறியாது வரை கடந்து நடக்குங்கால், இடித்துக் கூறித் திருத்த வேண்டும்.' நகுதல் பொருட்டன்று நட்டல் மிகுதிக் கண், மேற் சென்று இடித்தல் பொருட்டு' என்று உணர்த்து கின்றார் ஆசிரியர். உயர்ந்த பண்பாடும், ஏற்ற உறுதிப்பாடும், இசைந்த சொல் வன்மையும் ஒருங்கே வாய்க்கப் பெற்றாரே யல்லால், வேறொருவரால் மனிதனுக்கு இயல்பாக அமைந்த

தீய பண்பினைத் திருத்தி, நற் பண்பு பெறச் செய்ய முடியாது கற்றறிந்த பெரு மக்களுங் கூடத் தம்மைத் திருத்துவ ரின்றித் தனித்து விடப் பெற்றால், அதனால் நன்மை யடைய மாட்டார்கள் என்பது மட்டுமல்ல, தீமை யடைவது திண்ணம் என்றும் அறுதியிட்டுக் கூறுகின்றார் திருவள்ளுவர். 'இடிப் பாரை இல்லாத ஏமரா மன்னன், கெடுப்பா ரிலானுங் கெடும்' என்ற குறள் மூலம் கனி யிருப்பக் காய் கவரும் தன்மை போலல்லாது, ஏற்ற சமயத்தில் இனிமையாகச் சொல்லி, தீய பண்பினைத் திருத்தி, கடமை யாற்றுபவனே உண்மைத் தோழனுவான்! நண்பனின் கருத்தைத் தன்பால் ஈரக்கக் கருதி, அவன் தன் தீய பண்பினைத் தெரிந்தும், திருத்தாது முக நக முழக்கி, போ ற் றி ப் புகழ்ந்து, தன இச்சையை நிறைவு செய்துகொண்டு இன்புறும் மக்களும் உளர். நட்பின் பெயரால் பொய்யாக நடிக்கும் அக் கயவர்களைத் தான், 'நகை வகையர்' என்றழைக்கின்றார் வள்ளுவர். தன்னிச்சை கொண்டு தீயதைத் திருத்தாது வளரவிட்ட மக்கள், இரு நில வுலகின் கண் தீயவர் தொகையைப் பெருக்கி, தீராத துன்பத்தை நிலைநாட்டி விட்டனர். இந்நிலைமாறி இன்புறுவ தெந்நாளோ அறிகிலம்!

தோன்றாத் துணையெனத்தோன்றி, தொடர்ந்து நன்மை தருவது தோழமை! தோழர்களைத் தேர்ந்து தன் வாழ்வை வளப்படுத்திக் கொள்ள வேண்டுவ தவசியம்! இஃதை உணர்ந்த மக்கள், எண்ணற்ற நண்பர்களை ஏற்படுத்திக் கொண்டு, எவ்வித நலனும் எவர்மாட்டும் பெற முடியாத இக்கட்டான நிலையில், இடர்ப்படுவதைக் காணுந்தோறும் அவர் தம் அறியாமை குறித்து வருந்த வேண்டியதிருக் கிறது. நண்பர்கள் தொகை பெருகினால், ஐயம் மிகுந்து, பகை வளர்ந்து, தீராயிடும்பை தரும். ஒன்றல்ல இரண்டு நண்பர்கட் கதிகமானால் நட்பின் அடிப்படையிலே நன்மை பெற இயலாது. தேர்ந்து தெளிந்த நண்பர்களை உற்ற துணை யாகக் கொண்டு இன்புறுவதே சாலச் சிறந்ததாகும். கண்ட தும் கருத்தைப் பறிகொடுத்து நண்பர்களாகிக் கூடிக் குலாவி

மகிழும் பண்பினர் பலரும், சின்னாட்களில் பெரும் பகைவர்ளாக மாறி, தம் வாழ்நாள் முழுமையும் போராட்டத்திலேயே கழிக்கின்றனர். உற்ற நண்பனைப் பகைவனாக்கிக் கொண்டு இடர்ப்படுவதைப் போன்ற துன்பம் உலகில் வேறெதுவுமில்லை எனலாம்!

பழக்கத்தின் முற்பகுதியிலே மிளிரும் தன்மையது நற்பண்பு. பல நாட் பழகிய பின் புலனாவது தீய பண்பு. இஃது இயற்கை நியதியேயாம். பண்பு ஒற்றுமையில் வேற்றுமையின்றி ஒன்றுபடும் மக்களிடையே நிலவும் நட்பினால், பிறர் பலர் நன்மையடையாவிடினும், குறிப்பிட்ட அவ்விருவரேனும் இன்பம் பெறுவர். மிக நல்ல பண்புடையார் இருவர் ஒன்று சேர்ந்து, உற்ற நண்பர்களாக அமைந்தால், அவர்தம் சீரிய முயற்சியால் செயற்கருஞ் செயல் புரிந்து சிறக்க முடியும். என்றென்றும் அழியாது நிலைத்து நிற்கும் அவர்தம், உயர்ந்த நட்பினால், நாடும் நாட்டு மக்களும் பெரும் பயன் அடைவது திண்ணம்!

"நட்பு" ஞாலம் போற்ற நல்லதே நல்குமாகையான் அதனைப் போற்றி வளர்த்து, ஒருவரை மற்றவர் நன்காய்ந்தறிந்து நட்புக் கொண்டு, அன்புவழி நின்று ஒன்றுபட்டு உலகம் வாழ்த்த நல்வாழ்வு வாழ்வோமாக!

---

## யாழ் நூல்

பேராசிரியர் விபுலானந்த அடிகளார், பதினான் காண்டு ஆராய்ந்து எழுதிய அரிய, சிறந்த இசை நூல்.

பொருள் பொதிந்தது. தோற்றம் பொலிந்தது.
விலை மலிந்தது.

| | | |
|---|---|---|
| மெல்லிய தாள் | தாள் உறை | 15—0—0 |
| | துணி உறை | 18—0—0 |
| தடித்த தாள் | தாள் உறை | 18—0—0 |
| | துணி உறை | 20—0—0 |

அஞ்சல் செலவு வேறு.

(184 ஆம் பக்கத் தொடர்ச்சி)

பண்டு மதுரையில் நடந்த முச்சங்கட்குப் பிறகு, முறையாகத் தக்க தரத்தில் தன் கன்னித் தன்மை மாறாது தமிழன்னை வளர்கின்றாள் என்பதை இச் சங்க மேடையில் காணலாம். தமிழ்மொழி, தன் வளப்பத்திலும், தூய்மை சிறப்பு முதலியவற்றிலும் குன்றாது குறையாது மிளிர்வது இங்கே காணலாம்.

ஆதலின் தமிழ்நாட்டுப் பலப்பல சங்கங்கட்கும் தொன்மையிலும் தொண்டிலும் குறையாதது நம் சங்கம் எனத் தமிழ் நாட்டார் அனைவருக்கும் நினைவு படுத்தக் கடமைப்பட்டவனாகின்றேன்.

இச் சங்கமும் இதர சங்கங்களும் ஒன்றியாற்ற வேண்டிய பணிகள் பலவுள. தற்போது குறிப்பாக நந்தமிழ் நாட்டின் எல்லையை நோக்குவோம். முற் சங்ககாலத்தில் நம்நாடு திருவேங்கடம்வரையில் பரவி இருந்தது. அஃதாவது தற்போது தெலுங்கு நாடாக உரிமைகொண்டாடும் சித்தூர் மாவட்டம் முதலிய இடங்கள் எல்லாம் தமிழ் நாட்டு எல்லைக்குள் இருந் தன. அவற்றை நாம் திரும்பப்பெறவேண்டும். அதற் குத் தமிழ் மக்கள் அனைவரும் ஒன்று திரண்டு நிற்க வேண்டும். இத்தகைய அலுவல்களில் இச்சங்கம் தொடக்க முதல் மேற்கொண்ட பணிகள் பல. என் றென்றும் அத்தகைய பொதுத் தொண்டுகளில் முனைந்து நிற்க நம்சங்கம் எழுகின்றது.

தமிழ்த் தொண்டில் தோற்றம் பெற்ற சங்கம் கல்வித் தொண்டிலும் கவனம் செலுத்த வேண்டுவதா யிற்று. தமிழ்நாட்டில் தக்க புலவர்மணிகளைத் தோற்று விக்கவும், பொதுக் கல்வி புகலவும், திக்கற்றார்க்கு உண்டி, உறையுள் வழங்கிக் கல்வியளிக்கவும், நான்கு பெரு நிலையங்களை அமைத்து நடத்தலாயிற்று நம் சங்கம்.

நாளடைவில் இந்நிலையங்களின் செல்வ நிலை காரணமாக அவற்றை நடத்தித் தீருவதே பெருங் கடமையாக அமைந்தது. எனவே ஒரு சில ஆண்டு கள், சங்கத்தின் பெரும்பாலான அலுவலும் நேரமும் இக்கல்வி நிலையங்களைக் காப்பதிலேயே கடப்பதாயின.

அண்மையில் திருவாவடுதுறை ஆதீனத்தார் இந் நிலையங்களை நடத்தும் பொறுப்பை ஏற்கவே, இன்னும் பத்து ஆண்டுகளுக்குள் பொன்விழாக் கொண்டாடத்தகும் தரத்தில் சங்கத்தின் அலுவல்களை அமைக்கவேண்டிய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

தற்காலத்தில் இசையும், நாடகமும் செல்லும் போக்கு ஆழ்ந்து கருத வேண்டுவதாகின்றது. தமிழர் நாகரிகத்தில் இசையும் நாடகமும் தக்க இடம் பெற்றுள்ளன என்பதை முத்தமிழ் எனும் தமிழின் முப்பாகுபாட்டு அமைப்பே விளக்கும். தமிழர் அமைத்த இசை, நாடகமா இன்று நாம் கேட்பனவும், பார்ப்பனவும்? இவற்றைப் பண்டைய பகுதிகளுடன் ஒப்புநோக்கித் தொடர்பு படுத்தி அமைக்க வழிகளும் உளவோ என ஆய்வதும் தற்காலத்திற்கு இன்றியமையாததொரு தொண்டாகும். நம் சங்கம் தோன்றிய காலத்துக்குப் பின் ஒன்று பலவாகத் தோன்றியுள்ள சங்கங்கள் இயற்றமிழ் வளர்ப்பன. இனி அவைகளும் நம் சங்கமும் இயற்றுறையுடன் மற்றிருதுறைகளையும் சேர்த்து நடாத்துவது ஏற்றமுடைத்தே.

நம் சங்கம், முத்தமிழ் வளர்ச்சிபற்றித் தோன்றிய முதலே கருத்துடைய தென்பதை இங்கு வெளிவரும் பொழிலில் வெளிவந்த சிலப்பதிகார நாடகப் பகுதிகள், அதன் நடிப்பு, இசை இலக்கணங்கள், தமிழ்த்தாய் வணக்கங்களாகிய இசைப்பாக்கள் முதலிய செயல்கள் காட்டும். இயற்றமிழ்ப் பயிற்சிபோல அவைகளையும் நடத்த முயல்வதே சங்கத்தின் நோக்கமாகும். எனவே, முத்தமிழ்ப் புலவர்களும், வருங்காலத்தில் ஒருங்கிருந்து ஆவன செய்ய அடிப்படையாகவும், முதற்படியாகவும் இம் முத்தமிழ் விழா அமைகின்றது.

"இசைக்கு உருகார் எதற்கும் உருகார்", "நாடகமே உலகம்" என்னும் தமிழர் நாகரிகப் பண்புகளாகும் உண்மைகளுக் கேற்ப, இவ்விருதுறைகளிலும் நம் அன்பர்களைத் தக்க முறையில் ஈடுபடுத்துவதும் இவ்விழா அமைப்பின் நோக்கங்களுள் ஒன்றும்.

முற்கூறியவாறு, கல்வி நிலையங்களைக் காப்பதே பெருங் கடமையாக ஏற்பட்டு இருந்த நிலைமையில் சங்கத்தின் செல்வநிலை அருகியே இருந்து வந்திருக்கின்றது. கல்வி நிலையங்களின் காப்புப் பொறுப்பு மாறிய பின் சங்க நிகழ்ச்சிகளைப் பெருக்கவும் மாற்றியமைக்கவும் பெரும்பொருள் வேண்டுமன்றோ? இடம் பொருள் ஏவல் இன்றி, யாது செய்ய இயலும்?

ஆதலின் சங்கத்தின் பொருட்பேறு கருதுவதும் இவ்விழாவின் ஒரு கருத்தாகும்.

முத்துறைத் தமிழை வளம்பெற வளர்க்கவும், சங்கத்தின் செல்வநிலை கருதியும், அமைக்கப்பெறும் இவ்விழாவில், தமிழ் நாட்டுப் பெருமக்கள் அனைவரும் கலந்து கொள்ள வேண்டி அழைக்கின்றோம். அவர்கள் அனைவரும் வரையாது வழங்கும் வள்ளல்களாகவும், தத்தம் நிலைமைக் கேற்ப உளங் கனிந்து உதவும் அன்பர்களாகவும், அமைவார்களாக! முத்தமிழ்விழா அமைத்திருக்கும் வகையினை நீங்கள் நேரில் காண்கின்றீர்கள். இவ்விழா நிகழ்ச்சிகளின் விவரமும் அறிகின்றீர்கள். இதன் பொருட் பொறுப்பும் சங்கத்தின் நிதிப்பொறுப்பும் எத்துணைய என்பதையும் நீங்கள் ஒருவாறு உணர்ந்திட இயலும்.

இவ்வாற்றால், இங்கு, இன்றும், என்றும் வந்தருளும் அன்பர்கள் அனைவரும் தமிழ்த்தாயின் பணிக்குத் தத்தமக்கு ஒல்லும் வகையெல்லாம் ஓவாது உதவ வேண்டுகின்றேன்.

இவ்விழாவில் தலைமை ஏற்கவரும் பெருமக்கள் பலருக்கும், பேருரை யாளர்க்கும், ஊதியம் கருதாது கலந்து கொள்ளும் இசைவாணர்கள், நடனமணிகள் முதலிய அனைவர்க்கும் சங்கத்தாரின் நல்வரவும் நன்றியும் கூறுகின்றேன்.

முத்தமிழ்விழா சிறப்புடன் நிகழ இறைவன் அருள்புரிவானாக!

ஆ. யா. அருளானந்தசாமி நாடார்,
தலைவர்.

# ஆங்காங்கே (8)

திரு. கோ. தியாகராசன், G. M. V. C., தஞ்சை

## I. தமிழ்ச் சொல்லிருக்கப் பிற மொழிச் சொல் ஏன்?

(1) ஆடிடம்—Play ground

(2) உக்களமர்—Night watchman

(3) ஓலக்க மண்டபம்—Lecture hall

(4) அத்தாணி மண்டபம்—Audience hall.

(மண்டு—அகம்—மண்டகம். 'வாணிகம்' என்பது 'வாணிபம்' என வழங்குவது போல 'மண்டகம்' என்பது 'மண்டபம்' என வழங்குகிறது. மண்டு—நிறைதல். 'திருவிழாவிற்கு மக்கள் மண்டுகிறார்கள்' என்பதிலுள்ள 'மண்டு என்னும் சொல்லின் பொருள் நன்கு விளங்குகிறது. நெல்லு மண்டி—நெல் நிறைந்த இடம் எனவே 'மண்டபம்' தமிழ்ச் சொல்)

## II. பிற மொழிச் சொற்களை ஏற்றல்.

இத் துறையில் முயலும்போது தொல்காப்பியத்தின் இரண்டு நூற்பாக்களை ஏற்க வேண்டும்.

1. 'வட சொற் கிளவி வடவெழுத் தொரீஇ-எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே. (சொல். 401.)

2. 'சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்' (சொல். 402.)

எம் மொழியிலிருந்து சொற்களை எடுத்தாண்டாலும் இம் முறையைத் தழுவுதல் தகும்.

(அ) 'கவர்' என்னும் தமிழ்ச் சொல் தன்னுள் இழுப்பது* என்னும் பொருளுடையது. எனவே இச் சொல்லையே அஞ்சல் உறைக்குப் பயன் படுத்துவது தவறாகாது.

---

* (பொதிவது) என்றும் இருக்கலாம்.

(ஆ) பொத்தான் :—Button என்பது பொதுவாக உடையின் பக்கங்களை ஒன்றுடன் ஒன்றைப் பொருத்தி உடலை மூடுவதற்குச் பயன்படுவது. பொத்து என்னும் சொல் மூடு என்னும் பொருளுடையது. (வாயை பொத்து) இத்தொழிலுடைய Button என்னும் பொருளைப் 'பொத்தான்' எனத் தமிழாக்கிப் அப்பொருளைக் குறிப்பது தவருகாது.

(இ) Violin அல்லது Fiddle என்னும் இசைக் கருவிக்குள்ள இருபெயர்களில் Violin என்னும் ஆங்கிலப் பெயரை 'வயொலின்' எனத் தமிழில் எழுதி அப்பொருளைக் குறிப்பது தவருகாது.

**பழஞ் சொற்களுக்குப் புதுப்பொருள்.**

*உறிஞ்சி* — **Syringe**

*வைப்புழி* — **Bank**

*பண்ணை* — **Team**

*சல்லாரி* — **Impersonator**

**புதுச் சொல்லாக்கம்**

பண்டை இலக்கியங்களில் ஒரு குறுகிய இடத்திலிருந்து பூச்செண்டு கொண்டு ஆடும் ஆட்டத்திற்கு "நிலைச்செண்டு" எனவும் குதிரையிலிருந்து செண்டு ஆடும் ஆட்டத்திற்கு 'பரிச் செண்டு' எனவும் பெயர்கள் உண்டும்.

(சில மக்கள்களிடையே திருமணத்தின்பொழுது மணமக்கள் செண்டாடும் பழக்கம் இன்றும் உள்ளது.)

ஆனல் இவ்விளையாட்டுகள் இப்பொழுது மறைந்தன. எனினும், இப்பெயர்களை ஆக்கும் முறையை நாம் தழுவி தற்காலம் உள்ள விளையாட்டுகளுக்கு புதுப் பெயர்கள் ஆக்குவது சிறப்பாம். பந்தை காலால் உதைத்து விளையாடும் ஆட்டத்திற்கு 'கால் பந்து' என்னும் பெயர் இன்று வழங்குகிறது. இதுபோலவே பின் வருமாறு பெயர்கள் ஆக்குவது நன்றெனத் தோன்றுகிறது.

(1) *நிலைப்பந்து*—Tennis (ஒரு சிறு இடத்திலிருந்து விளையாடுவதால்)

(2) பரிப்பந்து Polo (குதிரை மேலிருந்து விளையாடுவதால்)

(3) எறி பந்து—Cricket (இவ்விளையாட்டில் ஒருவர் பந்தை எறிய மற்றவர் அப்பந்தை, துடுப்புகொண்டு அடிப்பதால்)

(4) வளைதடிப்பந்து—Hockey (இவ்விளையாட்டில் பந்தை அடிக்க ஒரு வளைவு தடியை பயன் படுத்துவதால்)

(5) மேசைக் கழங்கு—Billiards (மேஜை என்பது பிற மொழி. அதிலுள்ள வடவெழுத்தை நீக்கி தமிழ் எழுத்தைப் புகுத்து எழுதப்பட்டது.)

## III. தமிழின் செழுமை

(1) **தவக்கம்** — காலத் தாழ்ச்சி. இக்கருத்தை ஏற்றே கடன் வாங்கினவன் தவணை கேட்கிறான். முறை மன்றத்தில் வழக்காடுபவரும் தவணை கேட்கிறார்.

**தயக்கம்**—செயலில் தாழ்ச்சி. 'இதைச் செய்யத் தயங்காதே' என்பது வினையை முடித்துவிடு, பின் வாங்காதே என்பது பொருள்.

எனவே, தவக்கம்—Delay in time.

தயக்கம்—Delay in action.

(இச் சொற்களை விடுத்து 'late' (லேட்) என்பது தாகாது.

(2) சிறகு: இறகு, தோகை, தூவி :—

'**சிறகு**' என்பது பறவையின் மேலுள்ள சிறகுகளைக் குறிக்கும் பொதுப் பெயர். (Feathers)

**இறகு** என்பது இறக்கை (இறகு—கை) யிலுள்ள சிறகுகளைக் குறிக்கும் (Wing feathers)

**தோகை**—வாலிலுள்ள சிறகுகள். எல்லாப் பறவைகளும் அதன் வாலிலுள்ள சிறகுகளை விரிக்கவும் தொகுக்கவும் கூடும்.

எனவே இச் சிறகுகளுக்கு 'தோகை' என்னும் பெயர் வந்தது. (Tail feathers)

**தூவி** நெஞ்சு, வயிறு முதலிய இடங்களிலுள்ள மெல்லிய இறகுகள் (Down or soft feathers)

(3) **அண்டை வீடு, அடுத்த வீடு** 'நான் கந்தனை அண்டிப் பிழைத்தேன்' என்றால் 'கந்தனுடன் நெருங்கி அவன் உதவியை யும், துணையையும் பெற்றுப் பிழைத்தேன்' என்பதாகும். இப் பொருள் போல, என் வீட்டை நெருங்கி என் வீட்டின் உதவி யைக் கொண்டிருப்பது 'அண்டை வீடு' (இரண்டு வீடுகளுக் குப் பொதுவான ஒரு சுவர் வைத்துக் கட்டுவது நம் நாட்டில் பெரு வழககாயிருப்பது இப்படிப்பட்ட வீடுகளே ஒன்றனுக் கொன்று அண்டை வீடாகும்)

**அடுத்த வீடு** அண்டை வீட்டைப்போல ஒன்றினொன்று தொகுத்திராமல் பக்கத்திலிருப்பது அடுத்தவீடு.

(4) **சொச்சம்—மிச்சம்.**

சொச்சம் :—குறித்த அளவிற்கோ, அல்லது வேண்டிய அளவிற்கோ குறையாயுள்ளது. சொச்சம் (எ. கா.) ஒருவர் ஒரு கடையில் 21 ரூபாய்க்குப் பொருள்கள் வாங்கி, 18 ரூபா கொடுப்பாரானல் கடைக்காரர் சொச்சம் எங்கே என்பர்.

**மிச்சம** குறித்த அளவிற்கோ, அல்லது வேண்டிய அள விற்கோ மேற்பட்டது மிச்சம். (எ. கா.) மேற்காட்டியதுபோல 21 ரூபாய்க்கு பொருள் வாங்கி 25 ரூபா நோட்டைக் கொடுத் தால், வாங்கினவர் மிச்சம் கேட்பார், கடைக் காரரும் மிச்சம் கொடுப்பார். இத்தகைய செம்பொருளுள்ள சொற்களிருக்க நம்மவர் 'பாலன்ஸ்' (Balance) எங்கே என்கிறார்கள்.

## IV. ஒரு சொல்லிற்குப் பலபொருள் வந்ததெவ்வாறு.

(1) பா. இது ஓரெழுத்து ஒருசொல். இதற்கு பரப்பு அல்லது பரவு என்பது அடிப்பொருள். இக்காரணத்தால் ஆடை நெய்வதற்கு நூல் இழைகளை அடுத்தடுத்து பரப்பி யுள்ளது 'பா' அல்லது 'பாவு' எனப் பெயர் பெற்றது.

(2) **பாவாடை** பெரியோர் நடப்பதற்காகத் தரையில் துணி விரிப்பதை 'பாவாடை' விரித்தல் என்பது.

(3) பாவாடை பெண்கள் இடையில் அணியும் பரந்த ஆடைக்கு 'பாவாடை' யென்று பெயர். (சிறிய ஆடைக்கு 'சிற்ருடை' யென்று பெயர்)

(4) தலைப்பாகை மிக்க விரிந்துள்ள துணி. இதன் உண்மை கோயம்புத்தூர் கவுண்டர்களிடம் இன்றும் காணலாம்.

(5) பாய்ச்சல் வயலில் நீர் பரந்து கிடப்பதற்காக வாய் மடை வழி நீர் விடுதலை நீர் பாய்ச்சல் என்கிறோம். புலி பாய்ந்தது என்றால், அது முதலில் நின்ற இடத்திற்கும், வினையின் முடிவில் நின்ற இடத்திற்கும இடையிலுள்ள இடம் விரிந்தது என்பது விளக்கம்:

(6) பார் பரந்து கிடக்கும் தரை 'பார்'. பின் இச் சொல் 'உலகம்' என்னும் பொருள் பெற்றது போலும்.

(7) பார் ஐம்புலன்களில் கண்களே பரந்த இடத்தை அறியக் கூடியவை. வான் வரம்பு (Horizon) வரையிலும், விசும்பு வரையிலும் நிகழ்வன அறியக் கூடிய இவ் வினையை 'பார்' என்றும் சொல்லால் குறிப்பதும் சிறந்ததே.

(8) பாரம் நிலம், நீர், காற்று இப் பொருள்களில் மிக்க எடை யுள்ளது பார் (நிலம்) எனவே பாரம் என்பது எடையைக் குறிக்கும் சொல்லாயிற்று. மிக்க எடையுள்ள பக்கமே தராசு தணியு மாகையால், 'பார பக்கம்' என்னும் சொல் வழங்குகிறது: (இச் சொல் 'பார பட்சம்' என்றும் வடமொழியின் திரிபு அல்ல.) எனவே பொருளுள்ள பக்கம் முறை திரிதலைப் பார பக்கம் என்கிறோம்.

(9) பா 'சில் வகை எழுத்தில் பல் வகைப் பொருளைச் செவ்வனுடியிற் செறித்து இனிது விளக்குவது' என்னும் கருத்தை ஏற்று, பா (பாட்டு, செய்யுள்) என்றும் பெயர் வந்தது போலும்.

(10) பாட்டு தொன்று தொட்டு இசைத் தமிழ் அறிந்த தமிழன் நான்கு வரிச் செய்யுளை பரப்பி ஒரு நாழிகை இசைப்பதால் பாட்டு என வந்தது போலும்.

---